# ஸ்வரூபானுஸந்தாநாஷ்டகம்

[தன்னுடைய வாஸ்தவ ஸ்வரூபமான ஸச்சிதா நந்த லக்ஷணத்தோடு கூடிய பரப்ரஹ்மத்தின் நிலையை தீர்க்கமாக அப்யஸிப்பதான அனுஸந்தானத்தைச் செய்யும் ரீதியானது இந்த "ஸ்வரூப அநுஸந்தான அஷ்டகம்" எனும் எட்டு சுலோகங்களில் சுருக்கமாக ஸ்ரீமத் ஆசார்யாரால் விளக்கப்படுகிறது.]

**தபோ யஜ்ஞ தா3நாதி3பி4: சுத்3த4 பு3த்3தி4ர் -**
**விரக்தோ ந்ருபாதே3: பதே3 துச்ச2 பு3த்3த்4யா ।**
**பரித்யஜ்ய ஸர்வம் யதாப்நோதி தத்வம்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மிய ॥** 1

தபஸ், யக்ஞும், தானம் முதலானவைகளை அனுஷ்டானம் செய்வதினால் பரிசுத்தமான புத்தியோடு கூடியவனாகி, அரச பதவி முதலியவற்றை பிரயோஜனமற்றதாக எண்ணி வைராக்கியத்தை அடைந்து, எல்லா போகங்களையும் தியாகம் செய்துவிட்டு, உண்மைப்பொருளாய் உத்கிருஷ்டமாய் சாசுவதமாயுள்ள பிரஹ்மத்தை அடைபவன் நான் அதுவாகவே பிரம்மஸ்வரூபமாகவே இருக்கிறேன். என்ற அநுபவத்தை அடைகிறான்.

**த3யாளும் கு3ரும் ப்3ரஹ்ம - நிஷ்ட2ம் ப்ரசாந்தம்**
**ஸமாராத்4ய மத்யா விசார்ய ஸ்வரூபம் ।**
**யதா3ரப்நோதி தத்வம் நிதி3த்4யாஸ்ய வித்3வான்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மி ॥** 2

தயை நிறைந்தவராய், மிகுந்த சாந்தராய், பிரஹ்மத்தில் நிலைத்தவராயுள்ள குருவை நன்கு ஆராதித்து, அவரது உபதேசப்படி தன் ஆத்ம ஸ்வரூபத்தை புத்தியினால் விசாரம் செய்து, நன்கு தியானம் செய்து, அறிந்து கொண்ட ஒரு வித்வான், உண்மைப் பொருளாய், உத்திருஷ்டமாய், சாசுவதமாயுள்ள எந்த பிரஹ்மத்தை அடைகிறாரோ அந்த ப்ரஹ்மமே நானாகயிருக்கிறேன்.

**யதா3நந்த3ரூபம் ப்ரகாச ஸ்வரூபம்**
**நிரஸ்த ப்ரபஞ்சம் பரிச்சே2த3-ஹீநம் ।**
**அஹம்-ப்3ரஹ்ம வருத்த்யேக க3ம்யம் துரீயம்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மி ॥** 3

எது ஆனந்த (உணர்வு) ரூபமாயும், பிரகாச (அறிவு) ஸ்வரூபமாயும் பிரபஞ்சத்திற்கு அதீதமாயும் எவ்வித பிரிவுமற்றதாயும், 'நான் ப்ரஹ்மம்' என்கிற விருத்தியினால் மாத்திரம் அறியக்கூடியதாயும், நான்காவதாயும், உத்திருஷ்டமாயும், சாசுவதமாயு முள்ள பிரஹ்மமோ அதுவாகவே நான் இருக்கிறேன்.

ஆத்மஸ்வரூபம் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளுக்கு மேம்பட்டதாதலாலும், ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்கிற முக்குணங்களுக்கும், மேலுள்ளதாலும், அதை "துரீயம்" அதாவது "நான்காவது" என்ற சாஸ்திரத்தில் வியவஹறிக்கிறார்கள்.

**யத3ஜ்ஞாநதோ பா4தி விச்வம் ஸமஸ்தம்**
**விநஷ்டம் ச ஸத3யோ யதா3த்ம - ப்ரபோ3தே4 ।**
**மநோவாக3தீதம் விசுத3த4ம் விமுகதம்**
**பரம் ப்3ரஹ்ம நிதயம் ததே3வாஹமஸ்மி ॥** 4

எதை அறியாததினால் எல்லாப் பிரபஞ்சமும் உண்மைபோலத் தோன்றுகிறதோ எதனுடைய ஸ்வரூபம் அறியப்படும் போது உடனேயே (அந்தப் பிரபஞ்சம) மறைந்தும் விடுகிறதோ, (எது) மனசுக்கும் வாக்குக்கும் எட்டாததாய், பரமசுத்தமாய், (எல்லாக் கட்டுப்பாடுகளிலிருந்தும்) விடுபட்டதாய் உள்ள அந்த உத்கிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமாகவே நான இருக்கிறேன்.

**நிஷேதே4 க்ருதே நேதி நேதீதி வாக்யை:**
**ஸமாதி4 ஸ்தி2தாநாம் யதா3பா4தி பூர்ணம் ।**
**அவஸ்தா2 - த்ரயாதீத - மத்3வைத - மேகம்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மி ॥** 5

(உபநிஷத்துகளிலுள்ள) வாக்கியங்களினால் "இவ்விதம் இல்லை, இவ்விதம் இல்லை" என்று விலகக படும் போது ஸமாதி நிலையிலுள்ளவர்களுக்கு எது பரிபூர்ணமாக எங்கும் பிரகாசிக்கிறதோ. (ஜாக்ரத், ஸ்வானம், ஸுஷுப்தி எனற) மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பாற்பட்டதாய் இரண்டற்றதாய், ஒன்றாகவே (எது இருக்கிறதோ) அந்த உதகிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமாகவே நான் இருக்கிறேன்.

[பிரபஞ்சத்தில் எது அனுபவத்திற்கு விஷயமானாலும் அது இவ்விதம், அது இவ்விதம் என்று எடுத்துச் சொல்ல முடியும். அவ்விதம எடுத்துச் சொல்லக் கூடியதெல்லாம் பிரஹ்மம் அல்ல என்று உபநிஷத் வாக்கியங்கள் சொல்கிறபடியால. பிரபஞ்சத்தில் திருஷ்டியைச் செலுத்தாமல் அதிலிருந்து இழுத்து அந்த திஷ்டியைத் தனக்குள்ளேயே செலுத்திப் பார்ககுமபோது எல்லாவித விருத்திகளும் நின்று பிரஹ்மாகார விருத்தி ஒன்று மாத்திரம் நிலைக்கும். அதுவே ஸமாதி எனப்படும்.

**யதா3நந்த3 லேசை: ஸமாநந்தி3 விச்வம்**
**யதா3பா4ந ஸத்தவே ஸதா3பா4தி ஸர்வம் ।**
**யதா3லோகநே ரூமபந்யத் ஸமஸ்தம்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மி ॥** 6

எதனுடைய பெரிய ஆனந்தத்தின் சிறிய திவலைகளாலேயே உலகம் நன்கு ஆனந்தத்தோடு கூடினதாக இருக்கிறதோ, எதனுடைய பிரகாசம் இருக்கும் போது எல்லாம் ஸத்தாக (உண்மையாகத்) தோன்றுகிறதோ, எத்னுடைய வெளிச்சம் இருக்கும் போது வேறு எல்லா ரூபமும் பிரகாசிக்கிறதோ, அந்த உதகிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமாகவே நான் உள்ளேன்.

**அநந்தம் விபு4ம் நிர்விகல்பம் நிரீஹம்**
**சிவம் ஸங்க3 ஹீனம் யதோ3ங்கார - க3ம்யம் ।**
**நிராகார - மத்யுஜ்ஜ்வலம் ம்ருத்யு ஹீநம்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மி ॥** 7

முடிவற்றதாயும், வியாபகமாயும், ஸந்தேகஹத்திற்கு இடமற்றதாயும், ஆசையற்றதாயும், மங்களமாயும், எவ்வித பற்றுமில்லாததாயும், பிரணவத்தினால் அறியதக்கதாயும், உருவமற்றதாயும், நன்கு பிரகாசிக்கிறதாயும், நாசமற்றதாயும், எது (இருக்கிறதோ) அந்த உத்கிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமாகவே நான் உள்ளேன்.

**யதா3(அ)நந்த3 ஸிந்தெ4ள நிமக்3ந: புமான் ஸ்யாத்**
**அவித3யா விலாஸ: ஸமஸ்த ப்ரபஞ்ச: ।**
**ததா3 ந ஸ்பு2ரத - யத்3பு4தம் யந்நிமித்தம்**
**பரம் ப்3ரஹ்ம நித்யம் ததே3வாஹமஸ்மி ॥** 8

மனிதன் எப்பொழுது ஆனந்தமாகிற ஸமுத்திரத்தில் நன்கு மூழ்கினவனாக இருப்பானோ, அப்பொழுது எதன் காரணமாக அஞ்ஞானத்தின் விலாஸமான எல்லாப் பிரபஞ்சமும் பிரகாசிககிறதில்லை என்ற ஆச்சர்யமான விஷயம் ஏற்படுகிறதோ அந்த உத்திருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமே நான்.

**ஸ்வரூபாநுஸந்தா4ந ரூபாம் ஸ்துதிம் ய:**
**படே2தா3த3ராத் - ப3க்தி - பா4வோ மநுஷ்ய: ।**
**ச்ருணோதீஹ வா நித்யமுத்3யுக்த சித்தோ**
**ப4வேத்3 விஷ்ணுரத்ரைவ வேத3 ப்ரமாணாத் ॥** 9

எந்த மனிதன் பக்தியுள்ள எண்ணத்துடனும், ஆதரவுடன், ஆத்ம ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யும் முறையான (இந்த) ஸ்தோத்திரத்தைப் படிக்கிறானோ, அல்லது இதில் எப்பொழுதும், அக்கறையோடு மனஸை செலுத்திக் கேடகிறானோ, (அவன்) வேதம் (ஸதயமான) பிரகாஸமாயிருப்பதால் இங்கேயே விஷ்ணுவாக (ஸர்வ வியாபகமான பிரஹ்மமாக) ஆவான்.